18th February 1961]

*Paper mill*

* 366 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to start a paper mill in the Kanyakumari district; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) An application from a private entreprenuer for setting up a paper mill in Kanyakumari district seems to have been made to the Government of India. It is not possible to give any details at this stage.

**SRI N. K. PALANISAMI :** இப்பொழுது நம் மாகாணத்திற்கு தேவையான நியூஸ்பிரிண்ட் மிகக் குறைவாக இருக்கிறது. இதைச் சரிக்கட்டுவதற்கு இப்பொழுது ஒரே பேப்பர் மில்தான் பிரைவேட் செக்டாருக்கு விடப்பட்டிருக்கிறது. ஆகவே சர்க்காரும் கன்னியாகுமரி, திருச்சி போன்ற இடங்களில் "மொலாஸஸை" உபயோகித்து நியூஸ்பிரிண்ட் காகிதத்தைத் தயார் செய்ய நடவடிக்கை எடுப்பார்களா ?

**THE HON. SRI R. VENKATARAMAN** நியூஸ்பிரிண்ட் உற்பத்தி செய்வதற்கு அத்தியாவசியமான மூலப்பொருள்கள் நம்முடைய ராஜ்யத்தில் இல்லை. வெளி நாடுகளில் அதைப்பற்றி ஆராய்ச்சி செய்ததில் **Coniferous** காடுகள் இருக்கவேண்டுமென்று அவர்கள் முடிவு செய்திருக்கிறார்கள். அதனால்தான் வேறு ஏதாவது பொருள்களை வைத்துக்கொண்டு செய்ய முடியுமா என்று ஆலோசனை செய்துகொண்டிருக்கிறோம். நியூஸ்பிரிண்ட் தொழிலை ஆரம்பிப்பது அவ்வளவு சுலபம் அல்ல. அப்படி யாராவது தைரியமாக இந்தத் தொழிலை ஆரம்பிப்பதற்குத் தயாராக இருந்தால் சர்க்கார் அவர்களுக்கு எல்லாவிதமான உதவியும் செய்யும்.

**SRI A. V. P. ASAITHAMBI :** தற்போது இந்தியாவிலேயே நேபா நகரில்தான் நியூஸ்பிரிண்ட் உற்பத்தி நடைபெற்று வருகிறது. தமிழ்நாட்டைப் பொருத்தவரையில் 1940-ம் ஆண்டிலேயே தினத்தந்தி அதிபர் ஆதித்தன் அவர்கள் கையினால் செய்யப்பட்ட காகிதத்தை தன்னுடைய பத்திரிகையில் உபயோகித்துக் காட்டினார்கள். ஆகவே தென்னாட்டிலும் இந்தமாதிரியான வசதிகளை பயன்படுத்த மற்றவர்கள் முன்வராவிட்டாலும், அரசாங்கம் நியூஸ்பிரிண்ட் உற்பத்தி செய்வதற்கு முன்வருமா ?

**THE HON. SRI K. KAMARAJ :** அங்கத்தினரே ஒரு பத்திரிகை நடத்துகிறாரே. அப்படிச் செய்து பார்க்கலாமே. (சிரிப்பு.)

**THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் அங்கத்தினர் ஒரு பெரிய ஆர்குமென்டையே ஆரம்பித்திருக்கிறார்கள். இங்கே இருக்கக்கூடிய தனி நபர் ஒருவர் கையினால் செய்த காகிதத்தை வைத்து பத்திரிகை நடத்தினார் என்று சொன்னால், ஏன் அதை அவர் கைவிட்டுவிட்டார் என்பதையும் கனம் அங்கத்தினர்

தெரிந்துகொண்டிருக்கவேண்டும் (சிரிப்பு). கனம் முதல் அமைச்சர் சொல்லுவது போல, கனம் அங்கத்தினரே ஒரு பத்திரிகையை நடத்துகிறார். அவர் ஏன் கையினால் செய்த பேப்பரை உபயோகிக்கக்கூடாது என்று முதல் அமைச்சர் சொல்லுகிறார்கள். நியூஸ்பிரிண்ட் கையினால் செய்யக்கூடியது அல்ல. அது மிகவும் நுட்பமான ஒரு தொழில் அதற்கு வேண்டிய மூலப்பொருள்கள் இங்கே கிடைக்கவில்லை. ஒரு வேளை பின்னர், புளுகம், வாட்டில் இவைகளை உபயோகித்து ரிசெர்ச்சு மூலமாகச் செய்யமுடியும் என்ற நிலைமை ஏற்பட்டால், சர்க்கார் வேண்டிய உதவிசெய்யும்.

**Sri N. K. PALANISAMI** : கரும்புச் சக்கையை உபயோகித்து 200 டன் நியூஸ்பிரிண்ட் செய்வதற்கு ஒரு லைசென்ஸ் கோரி ஏதாவது ஒரு கம்பெனி சர்க்காருக்கு மனுக் கொடுத்திருக்கிறதா? சர்க்கார் அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள்?

**The Hon. Sri R. VENKATARAMAN** : கரும்புச் சக்கையை வைத்துக்கொண்டு நியூஸ்பிரிண்ட் செய்யமுடியாது, எழுதும் பேப்பர்தான் செய்ய முடியும்.

**Sri P. S. K. LAKSHMIPATHIRAJ** : மதுரை மாவட்டத்திலே காகித ஆலை ஒன்று நிறுவுவதற்கு மனுச் செய்திருக்கிறார்களே, அதன் முடிவு என்ன?

**The Hon. Sri R. VENKATARAMAN** : ஒரு லைசென்ஸ் ரொம்ப நாட்களாகத் தூங்கிக் கொண்டிருக்கிறது.

*Fertilizer distribution*

* 367 *Q*.—**Sri S. M. ANNAMALAI** : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மத்திய சர்க்காரால் நியமிக்கப்பட்ட உர விநியோக விசாரணைக் குழுவின் அறிக்கை மாநில சர்க்காருக்கு கிடைத்ததா?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : (*a*) Yes, Sir.

(*b*) A statement [a] showing the conclusions and recommendations of the Fertilizer Distribution Enquiry Committee is placed on the table of the House.

[a] Printed as Appendix I on pages 79–88 infra.